POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. 3-5 TN-MS O. P. P. 5?  ANNA Leading Progressive Tamil Daily of the ...

# கழகவேட்பாளருக்கு அமோக ஆதரவு

Regd. No. TN-MS (C) 422 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 27-11-1985 புதன் வெளியூர் 28-11-1985 வியாழன் [இதழ் 40

## செய்யாற்றில் கிராமங்கள் தோறும் வாழ்த்து முழக்கமுடன் வரவேற்பு

செய்யாறு, நவ. 27- செய்யாறு தொகுதியில் கழகத்தோழர்கள் தீவிர தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ளனர். கிராமங்கள் தோறும் கழக வேட்பாளர் குப்புசாமிக்கு மக்கள் உற்சாக வரவேற்பு அளித்து வருகிறார்கள்.

செய்யாறு இடைத் தேர்தலில் போட்டியிடும் கழக வேட்பாளர் வே.குப்புசாமி கிராமம் கிராமமாகச்சென்று வாக்குகள் கேட்ட போது மக்கள் அமோக ஆதரவு தெரிவித்து வரவேற்றனர்.

இதய தெய்வம் புரட்சித் தலைவரின் இரட்டை இலை சின்னத்தில் வாக்களிக்குமாறு வேட்பாளர் குப்புசாமி கேட்ட போது மக்கள் தங்களின் இருவிரல்களை காட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

இரண்டாவது நாளாக பெரிய ஏழாச்சேரி வயலாத்தூர் அரசாணிப்பாளையம், சித்தாலப்பாக்கம், சின்ன ஏழாச்சேரி, பகவத்தபுரம் மேணல்லூர், ஆகிய கிராமங்களில் கழக வேட்பாளர் குப்புசாமி சென்றபோது பெண்கள் ஆரத்திஎடுத்தும் "புரட்சித் தலைவர் வாழ்க" "எங்கள் சின்னம் இரட்டை இலை" என்று முழக்கம் எழுப்பியும் ஆதரவைத் தெரிவித்தனர்

பூனைத்தாங்கல், குண்டையதண்டலம், கருந்ட்டல், கீழ்நாயக்கன்பாளையம், மண்ணூர், வடகல்காக்கம், வாழவந்தல் ஆகிய ஊர்களில் வேட்பாளர்குப்புசாமியை அமோக ஆதரவுடன் வரவேற்றனர்

### வெற்றித் திலகம்

பல கிராமங்களிலும் ஆதிதிராவிடர் குடியிருப்புகளிலும் மாலைகள் அணிவித்து வெற்றித் திலகமிட்டு ஆசி கூறினர்

வெம்பாக்கம் ஒன்றியத்தைச் சேர்ந்த இந்த கிராமங்களில் வேட்பாளர் குப்புசாமி ஆதரவு திரட்டிய போது கழகஒன்றியச் செயலாளர் புஞ்சை செல்வராஜ் மற்றும் ஏராளமான கழகத்தினரும் உடன் சென்றிருந்தனர்

செய்யாறு நகரிலும் சுற்றுப்புற கிராமங்களிலும்கழகத்தோழர்கள் இரவு பகலாக தீவிரமாக தேர்தல் பணியாற்றிவருகின்றனர்

ஆங்காங்கு சுவர்களில் இரட்டை இலை சின்னம் எழுதி வருகின்றனர்.

செய்யாறு சட்டமன்றத் தொகுதி இடைத் தேர்தலில் போட்டியிடும் கழக வேட்பாளர் வே.குப்புசாமியை அறிமுகப்படுத்தும் பொதுக் கூட்டம் வரும் 29ந் தேதி (வெள்ளிகிழமை) மாலை செய்யாறு நகரில் நடைபெறுகிறது.

கழக முற்போக்கு கூட்டணியின் வேட்பாளராக போட்டியிடும் கழகவேட்பாளரை அறிமுகப்படுத்தி நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், அருணாசலம், இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் காந்திகாமராஜ்தேசிய காங்கிரஸ் குடியரசு கட்சி ஆகிய கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள் பேசுகின்றனர்

கழக நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் வாரியத் தலைவர்கள் மாவட்ட ஒன்றிய நகர கழக-மன்ற எம்ஜிஆர். இளைஞர் அணி செயலாளர்கள் பேசுகின்றனர்

செய்யாறு நகரில் உள்ள மண்டி திடலில் நடைபெறும் இந்த பிரம்மாண்டமான வேட்பாளர் அறிமுகக் கூட்டத்திற்கான ஏற்பாடுகளை அமைச்சர் முத்துசாமி செய்து வருகிறார்

## ஜெயவர்த்தனே டெல்லி வருகையா?

கொழும்பு, நவ. 27-

இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே அடுத்த மாதம் டெல்லி வந்து பிரதமர் ராஜீவ்காந்தியுடன் பேச்சு நடத்த இருப்பதாக முன்பு செய்தி வெளியானது அதனை இலங்கை மறுத்துள்ளது வங்க தேசத்தில் ஆசிய நாடுகளின் கூட்டுறவு மாநாடு டிசம்பர் முதல் வாரத்தில் நடக்கிறது அப்போது இலங்கைத் தமிழர் பிரச்சினை குறித்து டாக்காவில் ராஜீவ்காந்தியும் ஜெயவர்த்தனேயும் பேச்சு நடத்துவார்கள் என்று இலங்கை அரசு அறிவித்தது.

பேச்சு நடத்தியபின் டிசம்பர் 4ந்தேதி ஜெயவர்த்தனே கொழும்புக்கு திரும்புகிறார், டிசம்பர் 10-ந் தேதி முதல் 16-ந் தேதி வரை பாகிஸ்தான் அதிபர் ஜியா உல் ஹக் இலங்கையில் சுற்றுப் பயணம் செய்கிறார்

## பூட்டிய வீட்டில் திருடும் ஆசாமி கைது

சென்னை, நவ 27- பூட்டிக்கிடக்கும் வீடுகளில் பல ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகளை கொள்ளை அடித்த பலே ஆசாமி பிடிபட்டுள்ளான்,

இதுபற்றிய விபரமாவது- சென்னை காசிமேட்டை சேர்ந்தவன் முருகன் வயது 29, இவனைவேப்பேரி குற்றப் பிரிவு இன்ஸ்பெக்டர் ராசாராம்மோகன்ராவ் சந்தேகத்தின் பேரில்கைது செய்து விசாரித்தார்

விசாரணையில் முருகன் கோடம்பாக்கத்தில்சாரங்கபாணி என்பவர் இல்லத்திலும், அடையாறில் ஒரு இல்லத்திலும் மொத்தம் 55 சவரன் நகைகளைக் கொள்ளை அடித்ததை ஒப்புக் கொண்டான் அதன் மதிப்பு 75 ஆயிரம்ரூபாய்

அவர் கொடுத்த தகவலின் பேரில் போலீசார் நகைகளை மீட்டனர்

## பெண்களுக்கு சட்டமன்ற பதவியா? பாகிஸ்தான் மறுப்பு

இஸ்லாமாபாத், நவ. 27— பெண்களுக்கு சட்டமன்ற உறுப்பினர் பதவி தரக்கூடாது என்று சட்டமன்ற உறுப்பினர்கள் முடிவு எடுத்தனர்.

பாகிஸ்தானில் தற்போது ஜியாஉல்ஹக்கின் ராணுவ ஆட்சி நடைபெற்று வருகிறது அரசுக்கு ஆலோசனை கூறி சட்டமியற்ற பொம்மை சட்டசபை உள்ளது. அதற்கு அமெரிக்க பாணியில் "செனட்" என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

இதில் பெண்களையும் உறுப்பினராக்கலாம்என்ற யோசனை வந்தது. பெண்கள உறுப்பினர ஆகக் கூடாது என்று "செனட்" உறுப்பினர்கள் கூடி தீர்மானித்தனர்.

அதைத் தொடர்ந்து பெண்களுக்கு சட்டசபையாளர் பதவிபாகிஸ்தானில் கிடையாது என்று ஆகிவிட்டது.

பாகிஸ்தானில் ஒரே ஒரு பெண்மந்திரி மட்டும்இருக்கிறார்.

## பொற்கோவில் தலைமை குரு சுடப்பட்டார்

### குருநானக் பிறந்த நாளில் துயர சம்பவம்

அமிர்தசரஸ், நவ 27— குருநானக்கின் பிறந்த நாளான இன்று அமிர்தசரசில் உள்ள பொற்கோயிலின்தலைமைக்குருவை இன்று அடையாளம் தெரியாத ஆசாமிகள் துப்பாக்கியால் சுட்டனர் அவர் படுகாயம் அடைந்தார் அவரது பாதுகாவலரோ அதே இடத்தில் சுட்டுக் கொல்லப்பட்டார்

சீக்கியர்களின் மத குருவான குருநானக்கின் பிறந்த நாள்விழா இன்று நாடெங்கிலும் கொண்டாடப்படுகிறது

இதைத் தொடர்ந்து அமிர்தசரசில் உள்ள பொற்கோயிலில் விசேஷ பூஜை நடந்தது.

இந்த விழா நிகழ்ச்சிகளைரேடியோ நிலையம்ஒலிபரப்பிக் கொண்டிருந்தது.

பொற்கோயிலின் தலைமை குருவான கியானி சாகிப்சிங் இன்று அதிகாலையில் பொற்கோயிலின் கருவறைக்குச் சென்று கொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்து அவருடைய பாதுகாவலர் நானக்சிங் கைகளில் துப்பாக்கி ஏந்திய வண்ணம் சென்று கொண்டிருந்தார்.

அப்போது திடீரென்று அடையாளம் தெரியாத 3பேர் கியானிசாகிப்சிங்மீது துப்பாக்கியால் சுட்டனர். அவருடைய கையிலும் முதுகிலும் குண்டுகள் பாய்ந்தன. அவர் சுருண்டு விழுந்தார். அவருடைய பாதுகாப்பாளர் நானக்சிங்கையும் சீக்கிய தீவிர வாதிகள் சுட்டனர் அதே இடத்தில் நானக்சிங் பிணமானார்.

துப்பாக்கிச்சத்தம் கேட்டதும் சீக்கிய பக்தர்கள் அலறிஅடித்துக் கொண்டு ஓடினர் சுமார் 15 ஆயிரத்துக்கும் மேற்பட்ட சீக்கியர்கள் வழிபாட்டில் கலந்து கொண்டனர். கொலையாளிகள் பக்தர்கள் கூட்டத்தில் ஓடி மறைந்தனர்

படுகாயம் அடைந்த தலைமை மதகுரு கியானி சாகிப்சிங் உடனடியாக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார் அவருடைய உயிருக்கு ஆபத்து இல்லை என்று மருத்துவர்கள் கூறினர். மருத்துவ மனையில் அவருக்கு பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது யாரும் அவரைப் பார்க்க அனுமதிக்கப்படவில்லை.

## பிரதமர் ராஜீவுக்கு வியட்நாம் மக்களின் மகத்தான வரவேற்பு

ஹனாய், நவ 27— வியட்நாமில் சுற்றுப்பயணம் மேற்கொள்ள வந்த பிரதமர் ராஜீவுக்கு ஹனாயில் உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது

வியட்நாம் மற்றும் ஜப்பானில் 5 நாட்கள் சுற்றுப் பயணம் மேற்கொண்டுள்ள பிரதமர் ராஜீவ், முதல் கட்டமாக இன்று காலை வியட்நாமிற்கு வந்தார்.

வியட்நாம் தலைநகரான ஹனாயில் பிரதமர் ராஜீவ் காந்திக்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

விமான நிலையத்தில் வியட்நாம் பிரதமர் பிரேம் வான் டாக், வியட்நாம் கம்யூனிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் லீதுன், வெளி விவகாரத்துறை அமைச்சர் நிஜியுன் ஆகியோர் வரவேற்றனர்

பின்னர் பிரதமர் ராஜீவ் அணிவகுப்பு மரியாதையை ஏற்றார்

### அணிவகுப்பு மரியாதை

விமான நிலையத்தில் ஏராளமானவர்கள் பிரதமர் ராஜீவ்காந்தியை வரவேற்க கூடியிருந்தனர்

அணி வகுப்பு மரியாதை முடிந்தவுடன், பிரதமர் ராஜீவும் வியட்நாம் பிரதமரும் ஒரே காரில் ஏறி ஹனாய் நகருக்குச் சென்றனர்.

பிரதமர் ராஜீவ் சென்ற 45 கிலோ மீட்டர் தூரம் நெடுகிலும் சாலையின் இரு புறத்திலும் ஏராளமானவர்கள் கூடியிருந்து பிரதமர் ராஜீவை வரவேற்றனர்.

ஏராளமான மாணவ, மாணவிகள் இந்திய வியட்நாம் கொடிகளை கையில் ஏந்தி வரவேற்றனர்.

பிரதமர் ராஜீவும், சோனியாவும்ஹோ-சி-மின் நினைவகத்திற்கு சென்று மல வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

### வீர வியட்நாம்

வியட்நாம் பிரதமர் அளித்த விருந்தில் பேசுகையில், பிரதமர் ராஜீவ் கூறியதாவது:—

இந்தியா எப்போதும் வியட்நாம் மக்களுக்கு ஆதரவாகவே இருக்கும்

வியட்நாமை உருவாக்குவதில் வியட்நாம் மக்கள் வீரத்தோடும்உறுதியோடும் செயல்பட்டு வருகிறார்கள்

ஜவஹர்லால் நேருவும், ஹோசிமினும் குறிப்பிட்டவாறு விளையாட்டுக்கு என்று ஒரு நேரம் உண்டு, வேலைக்கு என்று ஒரு நேரம் உண்டு.

இப்போது நீங்கள் உழைக்க வேண்டிய நேரம்.

வியட்நாமின் பொருளாதார மேம்பாட்டிற்கு இந்தியா சகல உதவிகளையும் செய்யும்.

கம்பூச்சியாவை இந்தியா அங்கீகரித்துள்ளது கம்பூச்சிய மக்களுக்கு இந்தியா துணை நிற்கும்

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்

### இந்திரா காந்திக்கு வியட்நாம்விருது

அமைதி மற்றும் உலக சமாதானத்துக்கான விருதை வியட்நாம் நாடு இந்திரா காந்திக்கு வழங்கியிருக்கிறது.

அவரது மறைவுக்குப் பின் வழங்கப்படும் இந்தவிருதை பிரதமர் ராஜீவ் காந்தி இன்று ஹனாயில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியின் போது பெற்றுகொண்டார்.

### புரட்சித்தலைவர் வாழ்த்து

ஜப்பான், வியட்நாம் ஆகிய நாடுகளில் பயணம் செய்ய நேற்று இரவு புது டெல்லியிலிருந்து விமானம் மூலம் பிரதமர் ராஜீவ் புறப்பட்டார்.

பிரதமர் ராஜீவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் சார்பிலும், தனது சார்பிலும் நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை வாழ்த்தி வழியனுப்பினார்.

மத்திய அமைச்சர்களும் பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த பிரமுகர்களும் பிரதமரை வழியனுப்பி வைக்க விமான நிலையத்துக்கு வந்திருந்தனர்.

## பெண்ணிடம் வம்பு: எம். எல். ஏ. அடித்து கொலை

புதுடெல்லி, நவ. 27— பெண்ணிடம் வம்பு செய்ததாக ஒரு எம்.எல்.ஏ. டெல்லியில் அடித்துக் கொல்லப்பட்டார்.

அந்த எம்.எல்.ஏ. பெயர் டி.பி. கடம் மராட்டியத்தைச் சேர்ந்தவர்.

பம்பாயிலிருந்து அவர் டெல்லிக்குச் சென்றார். டெல்லியிலுள்ள மராட்டிய அரசு விருந்தினர் மாளிகையில் தங்கினார்.

டெல்லியில் கர்சன் ரோட்டிலுள்ள அடுக்குமாடி குடியிருப்புக்குச் செல்வார் என்றும் அங்கு ஒரு பெண்ணுடன் தொடர்பு கொண்டிருந்ததாகவும் கூறப் படுகிறது. சரோஜ் என்ற அந்தப் பெண் பிரகாஷ் என்பவரின் மனைவி.

சம்பவத்தன்று சரோஜிடம் எம்.எல்.ஏ. நெருங்கினார். தன்னை எம்.எல்.ஏ. கெடுக்கப்பார்ப்பதாக சரோஜ் கூச்சலிட்டாள்.

அவளது கணவனும் மற்றும் மூன்று பேரும் சேர்ந்து கடம் எம். எல். ஏ.யை அடித்து உதைத்தனர். அவர் அங்கேயே இறந்தார்,

முதலில் அவர் யார் என்பது தெரியாமல் இருந்தது. சடலத்தை போட்டோ படம் எடுத்து போலீசார் புலன் விசாரணை நடத்தினர். அதன் பின் அது எம்.எல.ஏ. சடலம் என்று கண்டுபிடிக்கப்பட்டது,

## கைத்தறிக்கொள்கை: பிரதமருக்கு முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம்

சென்னை, நவ 27— கைத்தறி துறையைப் பாதுகாக்க ஒரு தேசிய கொள்கையை ஏற்படுத்த வேண்டும் என்று பிரதமர் ராஜீவ்காந்திக்குமுதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதியிருக்கிறார்

இந்தத் தகவலை அமைச்சர் வி. சாமிநாதன் இன்று நிருபர்களிடம் கூறினார்.

வி.வி.சாமிநாதன் நிருபர்களிடம் மேலும் கூறியதாவது:-

கைத்தறி துணி கடந்த ஆண்டில் ரூபாய் 34 கோடி அளவுக்கு விற்றது.

இந்த ஆண்டு ரூபாய் 51 கோடிக்கு விற்பனை ஆகியுள்ளது

புதிய ஜவுளிக் கொள்கையை மத்திய அரசு அறிவித்திருக்கிறது.

இந்தக் கொள்கை ஆலைகளுக்குத் தான் ஆதரவாக இருக்கும் கைத்தறிதுணிகளை பாதுகாக்க இதில் வசதியில்லை ஆகவே கைத்தறித் தொழிலை பாதுகாக்க ஒரு தேசியக் கொள்கையை மத்திய அரசு உருவாக்க வேண்டும் இதை தமிழக அரசு வற்புறுத்தி வருகிறது முதல்வர் புரட்சித் தலைவரும் இதுகுறித்து பிரதமருக்கு கடிதம் எழுதி இருக்கிறார்,

இந்தியா முழுவதும் கூட்டுத் துறையில் 75 லட்சம் கைத்தறி நெசவாளர்கள் இருக்கிறார்கள்.

இதில் தமிழகத்தில் மட்டும் 30 லட்சம் பேர் இருக்கிறார்கள் கைத்தறித் துறைக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டும்

மத்திய அரசாங்கத்தில் உள்ள ராணுவம் மற்றும் பாதுகாப்புத் துறை அமைப்புகளுக்கு 50 சதவிகிதம் கைத்தறியில் இருந்து வாங்கலாம்.

ராணுவத்தினருக்குத் தேவையான பெட்சீட் திரைச்சீலைகளை கைத்தறியில் இருந்து வாங்கலாம கைத்தறித் துணிகளை வாங்க மாநில அரசு ஊழியர்களுக்கு கடன் வசதி தரப்படுவது போல மத்திய அரசு ஊழியர்களுக்கும் கடன்வசதி தரப்படவேண்டும்

இவ்வாறு அமைச்சர் கூறினார்.

## ஆசிரியர் பிரச்சினை: அமைச்சர் நம்பிக்கை

சென்னை, நவ 27— ஆசிரியர் பிரச்சினைக்கு நாளை அநேகமாக தீர்வு ஏற்பட்டுவிடும் என்று அமைச்சர் அரங்கநாயகம் நம்பிக்கை தெரிவித்தார்

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் நிருபர்களிடம் கூறியதாவது:-

அதிகாரிகள் மட்டத்தில் பேச மாட்டோம் என்று ஆசிரியர்கள் சொல்லி இருக்கிறார்களே என்று கேட்டபோது அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:

அமைச்சர்கள் பேச மாட்டோம் என்று யாரும் கூறவில்லை.

முதல்வர் அறிக்கையில் என்ன கூறியிருக்கிறார் என்பதைப்பார்க்க வேண்டும்.

அமைச்சர்கள் பேச மாட்டார்கள் என்று முதல்வர் சொல்லவில்லை,

அதிகாரிகளுடன் பேச்சு நடத்துங்கள் பிறகு எங்களிடம் பேச்சு நடத்துங்கள் என்று முதல்வர் கூறியதற்கு ஆசிரியர்கள் மதிப்பு அளிக்கவேண்டும் அதை விடுத்து ஆசிரியர்கள் போராட்டம் நடத்துவது சரியா?

ஆசிரியர் பிரச்சினையை முக்கிய பிரச்சினையாக கருதுகிறோம்.

அதை கவுரவ பிரச்சினையாக நாங்கள் கருதவில்லை இதில் சுமுக முடிவு ஏற்பட வேண்டும் என்றுதான் விரும்புகிறோம்

நாளை இதில் சுமுக முடிவு ஏற்படலாம் ஆசிரியர்கள் தான் நீதிமன்றத்துக்கு சென்றிருக்கிறார்கள்.

அப்படி போனது சரியா தவறா என்பது பற்றி அவர்களுக்குள்ளேயே கருத்து வேறுபாடு வந்திருக்கிறது.

எந்தபிரச்னையையும்பேசி தீர்த்துக் கொள்ள வேண்டும். ஆனால் அவர்கள் நீதிமன்றம் போய் உள்ளனர்.

முதல்வர் விடுத்த அறிக்கைக்கு மதிப்பளிக்க வேண்டாமா?

கேள்வி: சத்துணவு திட்டத்துக்கு செலவழிப்பதால் எங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றவில்லை என்று ஆசிரியர்கள் கூறுகிறார்களே

### உரிமை இல்லை

அரங்கநாயகம்: அப்படி சொல்ல அவர்களுக்கு உரிமை இல்லை எங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றுங்கள் என்று சொல்லுங்கள் ஏழை குழந்தைகளுக்கு சோறு போடாதே என்று சொல்ல உரிமை இல்லை. இப்படி அவர்கள் சொல்வதன் மூலம் தங்களைபற்றித்தான் நினைக்கிறார்களே தவிர சமுதாயத்தைப்பற்றி கவலைப்படவில்லை என்ற எண்ணம் மக்களிடம் வரும் பசியோடு இருக்கும் குழந்தைகளை வைத்து எப்படி அவர்களால் பாடம் சொல்லித்தர முடியும்? சத்துணவு இலவச சீருடை பாடபுத்தகங்கள் ஆகியவற்றுக்கெல்லாம் செலவிடுவது கல்விக்காகத்தான்,

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்

## விற்பனைக்கு வரும் குட்டித்தீவு

பிளைமவுத் (இங்கிலாந்து) நவ. 27— இங்கிலாந்து நாட்டிலுள்ள ஒரு குட்டி தீவு விற்பனைக்கு வருகிறது.

இங்கிலாந்து நாட்டின் அருகே உள்ளது பர்க் என்னும் தீவு. இந்தத் தீவின் மொத்தப் பரப்பளவே 22 ஏக்கர் தான் (9 ஹெக்டேர்) இந்தத்தீவு கள்ளக்கடத்தல் காரர்கள் தங்குவதற்கு ஏற்றதீவு எனக் கூறப்படுகிறது.

இந்தத்தீவில் 34 படுக்கைகள் கொண்ட அழகான ஓட்டல் ஒன்றும் கடை ஒன்றும் உள்ளது இந்தத் தீவு பிரபலமானதே எழுத்தாளர் அகதா கிறிஸ்டியால் தான் அகதா கிறிஸ்டி இந்தத் தீவை வைத்து ஈவில் அண்டர் தி சன் என்ற தலைப்பில் ஒரு நாவல் எழுதினார். அதற்குப்பின் இந்தத் தீவு பிரபலமானது. இந்தத் தீவு தென் மேற்கு இங்கிலாந்தில் உள்ளது.

இந்தத்தீவு இப்போது ஏலத்திற்கு வருகிறது. இதற்கான ஏலம் அடுத்த மாதம் (டிசம்பர்) 12ந்தேதி டிவன் துறைமுகத்தில் நடைபெறுகிறது.



**சுத்தம்**

சுத்தம் இரு வகைப் படும்; அவை அகச்சுத்தம், புறச்சுத்தம் எனக் கூறப்படும். இரண்டுமே மன்பதைக்குத் தேவை யெனினும் அகச் சுத்தமே மிக முக்கிய மானது.

—பேரறிஞர் அண்ணா



**மாறுதல்**

நமக்காகக் காலம் காத்திராது. காலத்திற் கேற்றவாறு மாறுதலை மேற்கொள்ள வேண்டும். மாறுதலை விரும்பாதவன் முன்னேற்றத்தைப் பற்றி நினைக்க வேண்டாம்.

—தந்தை பெரியார்

# இந்தியவிமானவிபத்து 2 சீக்கியர் மீது கனடா கோர்ட்டில் விசாரணை

லண்டன், நவ. 27— அயர்லாந்து அருகே பறந்து கொண்டிருந்த இந்திய விமானம் ஒன்று வெடித்துச் சிதறி கடலில் மூழ்கியது தெரிந்ததே. இது சம்பந்தமாக கைது செய்யப்பட்டுள்ள 2 சீக்கியர் மீது கனடா அரசு கோர்ட்டில் வழக்கு தொடர்ந்திருக்கிறது.

இந்திய போயிங்விமானம் "கனிஷ்கா" அயர்லாந்து அருகே பறந்து கொண்டிருந்தபோது திடீரென்று வெடித்துச் சிதறி கடலில் வீழ்ந்தது அதில் பயணம் செய்து கொண்டிருந்த 329 பேர்களும் பரிதாபமாக உயிரிழந்தனர்.

இந்தக் கோர விபத்து நடந்த அதே தேதியில் டோக்கியோ விமான நிலையத்திலும் ஒரு விபத்து ஏற்பட்டது. விமான நிலையத்தில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஒரு பெட்டியில் இருந்த வெடிகுண்டு திடீரென்று வெடித்தது. இதில் விமான ஊழியர் ஒருவர் உயிரிழந்தார்.

அந்த நேரத்தில் புறப்படவிருந்த இந்திய விமானத்தில் இந்த வெடிகுண்டு வைக்க பயங்கரவாதிகள் திட்டமிட்டிருந்தனர் என்பதும் பின்னர் கண்டுபிடிக்கப்பட்டது.

இந்த இரண்டு விபத்துக்களுக்கும் காரணமானவர்கள் என்று கருதப்படும் சீக்கிய பயங்கரவாதிகள் 2 பேரை கண்டுபிடித்து கைது செய்ய வேண்டும் என்றும் இந்தியா உள்பட பல்வேறு நாடுகளும் கோரிக்கை விடுத்தன.

இந்த நிலையில் கனடா அரசு அந்த இரண்டு சீக்கிய பயங்கர வாதிகளையும் சாமர்த்தியமாக கைது செய்தது ஒரு சீக்கியன் பெயர் இந்தர்ஜித்சிங் ரெயாட் (வயது 35) மற்றொரு சீக்கியனின் பெயர் தால்விந்தாசிங் பார்மல் (வயது 41) அண்மையில் தான் இவர்கள் இருவரும் கைது செய்யப்பட்டனர்.

பிரிட்டிஷ் கொலம்பியா நாட்டான வான்கவூர் தீவில் உள்ள சீக்கியர் வாழும் பகுதியில் மறைந்திருந்த போது இவர்களை கனடா நாட்டுப் போலீசார் கைது செய்தனர்.

பின்னர் இவர்கள் ஜாமீனில் விடப்பட்டனர். இவர்கள் மீது கனடா கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டுள்ளது. இந்தவழக்கு அடுத்த ஆண்டு மார்ச் மாதம் 24ந் தேதி விசாரணைக்கு வருகிறது. சீக்கியர்கள் இருவரும் அன்று கோர்ட்டில் ஆஜராக வேண்டும் என்று நீதிபதி உத்தரவிட்டுள்ளார்.

# 2 ஆயிரம் கிலோ கடத்தல் தங்கம் பறிமுதல்

புதுடெல்லி, நவ. 27— கடந்த 7 மாதங்களில் 1496 கிலோ மதிப்புள்ள கடத்தல் தங்கத்தை சுங்க இலாகா அதிகாரிகள் கைப்பற்றியுள்ளதாக மாநிலங்களவையில் நிதி அமைச்சர் வி.பி. சிங் தெரிவித்தார்.

# ராஜீவை கொல்ல முயன்றோர் மீது வழக்கு

நியூயார்க், நவ. 27— பிரதமர் ராஜீவ்காந்தி கடந்த ஜூன் மாதம் அமெரிக்காசென்றபோது அவரைக் கொல்ல முயன்றதாக சில சீக்கிய தீவிரவாதிகள் கைது செய்யப்பட்டனர்.

பிரதமரைக் கொல்ல முயன்றதாக கைது செய்யப்பட்ட பிரதாப்சிங் பிர்க் என்ற சீக்கிய தீவிரவாதி மீதான வழக்கு அடுத்த ஆண்டு பிப்ரவரி மாதம் 3ந் தேதி விசாரணைக்கு வருகிறது, பிர்க்கிற்கு ஜாமீனும் மறுக்கப் பட்டுள்ளது.

பிர்க்கும் அவனது கூட்டாளிகளும் தான் அரியானா முதல்வர் பஜன்லாலை கொல்ல முயன்றவர்கள். பிர்க்கின் மற்ற கூட்டாளிகளாக லால்சிங், அமர்சிங் ஆகியோரை போலீசார் தேடி வருகின்றனர்.



மதுரை மாநகர் மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணி சார்பில் நடைபெற்ற பாராட்டுவிழாவில், அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு மதுரை பாலவளத் தலைவர் நவநீதகிருஷ்ணன் நினைவு சின்னம் ஒன்றை அளித்தார்

அப்போது சேடப்பட்டி முத்தையா எம் எல் ஏ. எஸ் டி கே [illegible], முன்னாள் மேயர் பாலகிருஷ்ணன், ரத்தினவேல் ஆகியோர் உள்ளனர்.

# மொழிப் பிரச்சினை: நேரு-இந்திரா உறுதி சட்டமாக வேண்டும்

கடலூர், நவ. 27— மொழிப் பிரச்சினையில் நேரு, இந்திரா தந்த உறுதி மொழியை சட்டமாக்க வேண்டும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

கடலூரில் நடைபெற்ற தேசிய ஒருமைப்பாட்டு விழாவில் பங்கேற்று அமைச்சர் திருநாவுக்கரசு பேசுகையில் கூறியதாவது:-

இந்தியாவின் ஒற்றுமைக்காகவும், ஒருமைப்பாட்டுக்காகவும் பலர் தியாகம் செய்துள்ளனர். பெற்ற சுதந்திரம் பேணிக்காக்கப்பட, ஒன்றுபட்டு பலமான இந்தியா புகழுடன் விளங்கிட இந்தியாவின் தந்தை மகாத்மா காந்தியடிகள் தம் இன்னுயிரைத் தந்தார் அதுபோல் இந்தியாவின் தாய்என்றுபுகழக்கூடிய அளவுக்கு உயர்வெய்திய பிரதமர் இந்திராகாந்தி அம்மையார் இந்தியாவின் ஒற்றுமைக்காகவும், ஒருமைப் பாட்டுக்காகவும் தமது இன்னுயிரை விலையாக தர வேண்டியிருந்தது வன்முறையால் தீர்வு காண நினைக்கும் மனோபாவம்- எண்ணம் எல்லோரிடமும் இல்லாது போக வேண்டும். பேச்சு வார்த்தைகளால் அமைதியான வழிகளால் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் உணர்வு மேலோங்கிட வேண்டும் ஒன்றுபட்ட இந்தியா தொடர்ந்து பலமுடனும், சிறப்புடனும் இருக்க ஆங்கிலம் தொடர்பு மொழியாக இருக்க வேண்டும். பண்டித ஜவகர்லால் நேரு, அன்னை இந்திரா காந்தி அம்மையார் ஆகியோர் தந்த உறுதிமொழி சட்டமாக்கப்பட வேண்டும்.

இந்தியோ அல்லது வேறு எந்த ஒரு மொழியோ இன்னொரு மொழியின் மீது திணிக்கப்படுதல் கூடாது.

எந்த ஒரு மொழி பேசும் இந்தியரும் இரண்டாந்தர மக்களாக ஆக்கப்படுதல் கூடாது. ஐ.ஏ.எஸ்.ஐ.பி.எஸ். போன்ற அனைத்திந்திய தேர்வுகளில் எல்லா மாநில மக்களுக்கும் சமவாய்ப்பு மக்கள் தொகை அடிப்படையில் தரப்படுதல் இந்தியாவின் ஒற்றுமைக்கு பெரிதும் உதவும்.

முதல்அமைச்சர் புரட்சித் தலைவர் அவர்கள் இந்தியாவின் ஒற்றுமையிலும் ஒருமைப்பாட்டிலும் மிகவும் நம்பிக்கை உள்ளவராவார். இந்திய பொருளாதார ரீதியாக வளம் பெற்று விஞ்ஞானம், தொழில், தொழில் நுட்பம் ஆகியவற்றிலும் வளர்ச்சி பெற்று வருகிறது. மேலும் வளர்ச்சி பெற எல்லாத் தரப்பு மக்களும் ஒன்றுபட்டு உழைக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

# விமானத்தை கடத்திய ஆசாமிகள்பயணிகளிடம் நடத்திய வெறியாட்டம்

வாலெட்டா, நவ. 27— மீட்புப்பணிகளின் போது வெடிகுண்டு வைத்து தகர்க்கப்பட்ட எகிப்திய விமானம் சின்னாபின்னமானது தெரிந்ததே. உயிரிழந்தவர்களின் சடலங்கள் வாலெட்டா விமான நிலையத்தில் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. கடத்தல்காரர்களின் தலைவன் ஓமார்மவுசக்கியிடம் அதிகாரிகள் விசாரணை செய்துவருகிறார்கள்.

கடந்த ஞாயிற்றுக்கிழமை எகிப்திய விமானம் ஒன்று மால்ட்டாவுக்குக் கடத்திச் செல்லப்பட்டதும் அது வால்ட்டாவில் இறங்கிய போது அதை மீட்பதற்கு எகிப்திய அதிரடிப்படையினர் நடவடிக்கை எடுத்ததும் தெரிந்ததே.

இந்த நடவடிக்கையின் போது கடத்தல்காரர்கள் விமானத்தை குண்டுவைத்து தகர்த்தனர். இதில் 59 பேர் உயிரிழந்தனர்.

## சுட்டுக் கொன்றனர்

கடத்தல்காரர்கள் ஏற்கனவே விமானத்திலிருந்த பயணிகளில் 7 பேரை சுட்டுக் கொன்றார்கள்.

கடத்தல்காரர்களின் தலைவன் என்று கருதப்படும் ஓமார் மவுசக்கி டுனிஷியா நாட்டைச் சேர்ந்தவன் என்று கூறப்படுகிறது. மால்ட்டாவில் இந்த கடத்தல்கார தலைவனுக்கு பலத்தபோலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது. அவனிடம் போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்.

உயிரிழந்தவர்களின் சடலங்கள் லூக்கா விமான நிலையத்தில் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

இறந்தவர்களின் குடும்பத்தினர்கள் அடையாளங்காட்டி சடலங்களை எடுத்துச் செல்லுவதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

கடத்தல்காரர்களில் 4 பேர் கொல்லப்பட்டார்கள் எஞ்சியவன் தான் ஓமார் மவுசக்கி 20 வயதானவன்.

அதிரடிப்படையினர் சற்று நிதானத்துடன் நடவடிக்கைகளை எடுத்திருக்க வேண்டும் திட்டம் தவறி விட்டது என்று கிரீஸ் குற்றம் சாட்டியது.

## எகிப்து குற்றச்சாட்டு

இந்த விமானக் கடத்தல் லிபியா நாட்டின் திட்டமிட்ட சதி என்று எகிப்து குற்றம் சாட்டியுள்ளது.

அதிரடிப்படையின் தலைவரான கலால் மிக்க சாமர்த்தியமாக கடத்தல்காரர்களை தாக்கியதாகக் கூறினார்.

ஒரு கடத்தல்காரனின் மீது விழுந்து அவனுடைய தலையை வெட்டி எறிந்தேன் என்று அவர் கூறினார்.

உயிர் பிழைத்த பயணிகள் அனைவரும் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளனர். யாரும் உத்தரவின்றி மால்ட்டாவை விட்டுச் செல்ல வேண்டாமென்று மால்ட்டா மாஜிஸ்திரேட் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

# தொழில்பிரச்சினைகள் தீர கூடுதலாக நீதிமன்றங்கள்

## டெல்லி மாநாடு கோரிக்கை

புதுடெல்லி, நவ 27— தொழில் தகராறுகளை தீர்க்க அதிக நீதிமன்றங்களை உருவாக்க வேண்டும் என்று இந்தியதொழிலாளர் மாநாடு கேட்டுக் கொண்டது.

இந்திய தொழிலாளர்கள் 28-வது மாநாடு டெல்லியில் நடந்தது. மாநாட்டுக்குமத்தியதொழிலாளர் நல அமைச்சர் டி. அஞ்சய்யா தலைமை வகித்தார்.

மாநில அமைச்சர்கள், தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் ஆகியோர் இந்த மாநாட்டில் கலந்துகொண்டனர்.

தொழில் உறவு வளர்வதற்கு மாநாட்டில் ஆதரவு தெரிவிக்கப்பட்டது அதற்கு சில திட்டங்களும் தயாரிக்கப்பட்டன.

தொழிலாளர் கமிட்டி அமைக்கப்பட வேண்டும் ஆறு மாதங்களுக்கொரு முறை அந்த கமிட்டி கூட வேண்டும்என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தொழில் தகராறுகளை இருதரப்பு (நிர்வாகம்—தொழிற்சங்கம்) பேசித் தீர்க்க வேண்டும். அதில் உடன்பாடு ஏற்படாவிட்டால் முத்தரப்பு பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் அல்லது நீதிமன்ற தீர்ப்புக்கு விடவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

தொழில் தகராறுகள் நீண்டகாலம் தீர்க்கப்படாமல் இருப்பது குறித்து மாநாடு வருத்தத்தை தெரிவித்தது. தொழிற் கோர்ட்டுகள் அதிகம் அமைக்க வேண்டும் என்றும் மாநாடு கேட்டுக் கொண்டது.

# 38 பெண்களை மணந்த 102வயதுக்காரர்

பெய்ஜிங், நவ. 27— சீனாவில் வடமேற்கு பகுதியில் ஜின்ஜியாங் என்றஇடத்தில் வாழும்ஒரு விவசாயிக்கு 102 வயது ஆகிறது. 38 பெண்களை இவர் மணந்திருக்கிறார். அந்த பகுதியில் 33 பேர் நூறு வயதை தாண்டியவர்கள். அவர்களும் 15 பெண்கள் வரை மணந்தவர்கள்.

# நடுத் தெருவில் பெண்கள் நடனமா? டாக்காவில் எதிர்ப்பு

டாக்கா, நவ. 27— டாக்காவில் நடுத் தெருவில் பெண்களை ஆட வைக்கும் அரசின் முயற்சிக்கு பலத்த எதிர்ப்பு கிளம்பியுள்ளதால் அது நிறுத்தப்பட்டது.

டாக்காவில் அடுத்த மாதம் தெற்கு ஆசிய கூட்டுறவு அமைப்பிலுள்ள நாடுகளின் மாநாடு நடைபெறுகிறது

இந்த மாநாட்டில் பிரதமர் ராஜீவ்காந்தி, பாகிஸ்தான் அதிபர் ஜியா இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே; நேபாளம் மற்றும் பூடான் மாலத்திவு நாடுகளைச்சேர்ந்த பிரதிநிதிகள் பங்கேற்கின்றனர்.

மாநாட்டுக்குவருகைதரும் பல்வேறு நாட்டுத் தலைவர்களுக்குசிறப்பான முறையில் வரவேற்பு ஏற்பாடுகள்நடை பெற்று வருகின்றன.

வரவேற்பு நிகழ்ச்சியின் ஒரு பகுதியாக பள்ளி சிறுமிகளின் நடனமும் இடம் பெற இருந்தது; சிறுமிகளையும்; இளம் பெண்களையும் நடுரோட்டில் நடனமாடச்செய்வது முஸ்லிம் மதச் சட்டத்துக்கு விரோதமானது என்று கூறி பல்வேறு அமைப்புகள் எதிர்ப்பு தெரிவித்தன.

இதையடுத்து அந்த நிகழ்ச்சி வாபஸ் பெறப்படுமென்று வங்கதேச அதிபர் எர்ஷாத் அறிவித்துள்ளார்.

முஸ்லிம் மதச் சட்டத்துக்கு எதிரான எதையும் தாம் செய்ய விரும்பவில்லை என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

# நபிகள் நாயகம் பிறந்தநாள் விழா ஊர்வலம்

சென்னை, நவ. 27— நபிகள் நாயகம் பிறந்த நாளை ஒட்டி சென்னையில் பிரமாண்ட ஊர்வலம் நேற்று மாலை நடந்தது.

சென்னை நகர மிலாது கமிட்டி சார்பில் மிகப் பெரிய ஊர்வலம் அங்கப்ப நாயக்கன் தெருவில்இருந்து புறப்பட்டது ஏ.யூசுப் ஊர்வலத்தை துவக்கி வைத்தார்

சாரட் வண்டிகள் திறந்த ஜீப்புகளில் மார்க்க தலைவர்கள் வந்தனர் பல முக்கிய சாலைகள் வழியாக ஊர்வலம் சீரணி அரங்கை வந்தடைந்தது தொழுகைக்குப் பிறகு எஸ்.பி. நூர் முகமது தலைமையில் விழா நடந்தது.

# பஸ்சில் சென்ற 25 தமிழர்களை கடத்திய சிங்கள ராணுவம்

கொழும்பு, நவ. 27— பஸ்சில் சென்ற 25 தமிழர்களை சிங்கள ராணுவத்தினர் கடத்திச் சென்றனர்.

இலங்கையில் துஜ[illegible]நலை என்ற இடத்தில் பயணிகள் பஸ் ஒன்று சென்று கொண்டிருந்தது.

அந்த பஸ்சில் 25 தமிழர்கள் பயணம் செய்துகொண்டிருந்தனர்.

அப்போது சிங்கள ராணுவத்தைச்சேர்ந்த ஊர்காவல் படையினர் பஸ்சை சுற்றி வளைத்து நிறுத்தினர்.

பஸ் டிரைவரைப் பிடித்து தள்ளிவிட்டு அதிலிருந்த பயணிகளோடு அவர்கள் அதனை கடத்திச் சென்றனர். இந்தப் பயணிகளின் கதி என்னவாயிற்று எனத் தெரியவில்லை.

இதையடுத்து அப்பகுதியில் பதட்ட நிலை ஏற்பட்டுள்ளது.

# ஆசாமி கைது

சென்னை நவ. 27 வீடுகளில் புகுந்து கொள்ளையடித்ததாக சென்னை டிரஸ்ட்புரத்தைச் சேர்ந்த தாமோதரன் என்பவரை போலீசார் கைது செய்தனர்

# செய்யாறுதேர்தல்:ஒரேமேடையில் அனைத்து வேட்பாளர்கள்

செய்யாறு, நவ. 27— செய்யாறு இடைத் தேர்தலில் போட்டியிடும் அனைத்து வேட்பாளர்களும் ஒரே மேடையில் தோன்றி பேசுகிறார்கள்.

செய்யாறு இடைத்தேர்தல் அடுத்த மாதம் 16ந் தேதி நடைபெற உள்ளது. அ.தி.மு.க. சார்பில் விருப்பு[illegible] பள்ளி சாமி போட்டியிடுகிறார். இவர் உள்பட மொத்தம் 10 வேட்பாளர்கள் களத்தில் உள்ளனர்.

இவர்கள் அனைவரும் அடுத்தமாதம் (டிசம்பர்) 1-ந் தேதிஒரே மேடையில் தோன்றி பேசுகிறார்கள்.

இந்த பொது மேடை நிகழ்ச்சி திருவத்திபுரம் அரசினர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில் டிசம்பர் 1—ந் தேதி மாலை 6 மணிக்கு நடைபெறுகிறது. இதற்கான ஏற்பாடுகளை தமிழ்நாடு வாக்காளர்பேரவை செய்து வருகிறது.

இந்த பொதுமேடை நிகழ்ச்சிக்கு மாவட்ட ஆட்சித்தலைவர் டேனியல் குணாநிதியும், செய்யாறு தேர்தல் அதிகாரி அருணாவும் ஒத்துழைப்புதர உறுதி அளித்துள்ளதாக வாக்காளர் பேரவை அமைப்பாளர் வெங்கடேசன் அறிவித்துள்ளார்.

# வெள்ள பாதிப்பு: நாவலர் நிதியுதவி

சென்னை, நவ 27— சென்னை மாவட்டத்தில் சமீபத்தில் ஏற்பட்ட மழையின் காரணமாக வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு வெள்ள நிவாரண நிதி மயிலாப்பூர்-திருவல்லிக்கேணி வட்டங்களிலும் கோட்டை - தண்டையார்பேட்டை வட்டங்களிலும் அன்னை சத்தியா நகர், மோட்சபுரம் ஆகிய பகுதிகளிலும்; எழும்பூர்-நுங்கம்பாக்கம் பகுதிகளிலும் ஒட்டேரிபகுதி; திவாகர் நகர்; பிரிவரிரோடு. நடுவங்கரை ஆகிய பகுதிகளிலும் பெரம்பூர்—புரசை வட்டத்தில் பாதிக்கப்பட்ட பகுதிகளிலும் வழங்கப்பட்டது. மொத்தம் 1846 குடும்பங்களுக்கும்; மொத்த தொகை 1 லட்சத்து 96ஆயிரம் ரூபாய் வழங்கப்பட்டது இலவச அரிசி, வேட்டி சேலையும் அனைத்து குடும்பங்களுக்கும் வழங்கப்பட்டது.

பாதிக்கப்பட்ட 1846 குடும்பங்களுக்கும், நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் இந்த உதவிகளை வழங்கினார். மாவட்ட ஆட்சித் தலைவர் லால் ராணா சைலோ தலைமை வகித்தார்; வட்ட ஆட்சியாளர் [illegible] ஆகியோர் உடன் இருந்து உதவி புரிந்தனர்.

# குமரி நற்பணி மன்ற நிர்வாகிகள்

சென்னை நவ. 27— குமரிநற்பணி மன்ற புதிய நிர்வாகிகள் தேர்தல்கடந்த 24ந்தேதி நடைபெற்றது. தலைவராக ஜோஸ்டேனியலும்; துணைத் தலைவர்களாக பி.ஜார்ஜ்;பி.செல்வராசன் ஆகியோரும்பொதுச் செயலாளராக ஏகநாதன்; பொருளாளராகஜான்சனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நான்கு செயலாளர்கள் உள்பட ஒன்பது செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# செய்யாறு தொகுதி தேர்தல் பணிக்குழு இணைப்பு

செய்யாறு தொகுதி தேர்தலுக்கு; வெம்பாக்கம் ஒன்றியப் பொருளாளர்

**திரு.எ. லெனின்**

அவர்கள் வெம்பாக்கம் ஒன்றிய தேர்தல் பணிக்குழுவில் இடம்பெற்று தேர்தல் பணியாற்றுவார்.

செய்யாறு தொகுதி தேர்தலுக்கு, செய்யாறு நகரப் பொருளாளர்

**திரு சமியுல்லாகான்**

அவர்கள் செய்யாறு நகரத் தேர்தல் பணிக்குழுவில் இடம் பெற்று தேர்தல் பணியாற்றுவார்.

செய்யாறு தொகுதி தேர்தலுக்கு மகளிர் அணி மாவட்டத் துணைச் செயலாளர்களான

**திருமதி சி சந்திரா**

மற்றும்

**திருமதி சரசுவதி பாண்டுரங்கன்**

ஆகியோர் செய்யாறு நகரத் தேர்தல் பணிக்குழுவில் இடம் பெற்று தேர்தல் பணியாற்றுவார்கள்.

இவ்வறிவிப்பு இதயதெய்வம் மாண்புமிகு

**முதல்வர் புரட்சித்தலைவர்**

அவர்களின் ஒப்புதலுடன் வெளியிடப்படுகிறது.

**சு. முத்துசாமி**

27-11-85 போக்குவரத்துத் துறை அமைச்சர்

# 75 ஆண்டுக்கு ஒருமுறை காணப்படும் வால்நட்சத்திரம்: ஆராயவிஞ்ஞானிகள் ஆர்வம்

புதுடெல்லி; நவ. 27— எழுபத்தைந்து ஆண்டுக்கு ஒரு முறை காணப்படும் வால் நட்சத்திரத்தை ஆராய உலக விஞ்ஞானிகள் பெருக்க ஆர்வம் காட்டி வருகின்றனர்.

இந்த வால் நட்சத்திரத்திற்கு ஹாலி என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. இந்த வால்நட்சத்திரத்தை பார்த்து ஆராய விஞ்ஞானிகள் நெடுநாளைக்கு [illegible] ஆர்வமாக காத்திருக்கின்றனர்.

இந்த வால் நட்சத்திரம் 75 ஆண்டுக்கு ஒருமுறை பூமியின் அருகே வருகிறதாம்.

கடைசியாக 1920—ம் ஆண்டில்தான் பூமியின் அருகே வந்தது. இப்போது வந்து [illegible] முற்பட்டுள்ளது.

இன்றுமுதல் 2 நாட்களுக்கு பூமியின்மிகநெருக்கமான இடத்தில் இருக்கும். அதாவது பூமியில் இருந்து 9 கோடியே 23 லட்சம் கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கும்.

இதன் பிறகு இது 6 கோடியே 28 லட்சம் கிலோ மீட்டர் தொலைவுக்குள் வரும்.

பிப்ரவரி 9ம் தேதியன்று பூமிக்கு மிக அருகில் வருமாம்.

வானில் சக்தி வாய்ந்த ஒளிமிக்க ஆச்சரியக்குறி போல இது தோற்றம் அளிக்குமாம். இதை வெறுங் கண்ணாலேயே பார்க்க முடியும்.

அடுத்த ஆண்டு ஏப்ரலில் இது மெல்ல மெல்ல மறையத் துவங்கும்.

இந்த வால்நட்சத்திரத்தின் குறுக்களவு 8 கிலோ மீட்டர்தான்.

ஆனால் அதன் வால்பகுதி பலஆயிரக்கணக்கான கிலோ மீட்டர்நீளமுள்ளதாக இருக்குமாம்.

இந்த ஹாலிவால் நட்சத்திரத்தை ஆராய அனைத்துலக ஹாலி ஆய்வு இயக்கம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. 47 நாடுகளைச்சேர்ந்த சுமார் 1000 விஞ்ஞானிகள் இந்த வால் நட்சத்திரத்தை ஆராய காத்திருக்கின்றனர்.

Edited and Published by K.RAVINDRAN on behalf of Changamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Press at 14 Nelson Manickam Road, MADRAS-600029.

# பஞ்சாலை ஊழியர் ஸ்டிரைக் வாபஸ்

## அரசின் திட்டத்தை ஏற்று வேலைக்குத் திரும்பினர்

**கோயம்புத்தூர், நவ. 27- புரட்சித்தலைவர் அரசு அறிவித்த போனஸ் சமரச திட்டத்தை ஏற்று பஞ்சாலை தொழிலாளர்கள் வேலைக்கு திரும்பியுள்ளனர்.**

நவம்பர் 9-ந் தேதி முதல் சுமார் ஒரு லட்சம் தொழிலாளர்கள் நடத்தி வந்த வேலை நிறுத்தம் வாபஸ் ஆகியுள்ளது.

கோவை, பெரியார் மாவட்டத்தைச் சேர்ந்த சுமார் 70 பஞ்சாலை தொழிலாளர்கள் சுமார் ஒரு லட்சம் பேர் அதிக போனஸ் கோரினர்.

இந்தப்பிரச்சினையில் சுமுக தீர்வு ஏற்பட கழக அரசு சமரசப் பேச்சு வார்த்தை நடத்தியது அதில் முடிவு ஏற்படவில்லை.

குறைந்தபட்ச போனஸ் தொகையோடு நிரந்தர தொழிலாளர்கட்கு ரூ300ம் மற்றவர்கட்கு ரூ 200ம் கூடுதலாக திரும்படி அரசு ஆலோசனை கூறியது இந்த ஆலோசனையை பெரும்பாலான ஆலைகள் ஏற்றுள்ளன.

இதனால்தொழிலாளர்கள் வேலைநிறுத்தத்தைவாபஸ் பெற்று திங்கட் கிழமை முதல் வேலைக்கு திரும்பியுள்ளனர்.

அரசின்சமரசதிட்டத்தை 74ஆலைகளில் 27ஆலைகள் தவிர மற்ற ஆலைகள் ஏற்றுள்ளன.

எனவே தொழிலாளர்கள் வேலைக்கு திரும்பி விட்டனர் என்று தொழிலாளர்களின் கூட்டு நடவடிக்கை கமிட்டி அமைப்பாளர் காளியண்ணன் தெரிவித்துள்ளார்.

மற்றஆலைகளைச் சார்ந்தவர்களும் அரசின் திட்டத்தை ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புவதாக அவர் தெரிவித்துள்ளார்.

## முதல்வரிடம் நாகிரெட்டி அளித்த வெள்ள நிவாரண நிதி

சென்னை, நவ 27- நாகிரெட்டி இல்லத் திருமண விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டபோது வெள்ள நிவாரண நிதிக்கு ரூபாய் ஒருலட்சத்தை நாகிரெட்டி முதல்வரிடம் அளித்தார். அவருடைய பேரனும், மணமகனுமாகிய சதீஷ் ரூபாய் ஒரு லட்சத்தை வெள்ள நிவாரண நிதிக்கு வழங்கினார்.

மராட்டிய மாநில ஆளுநர் பிரபாகரராவ் தனது ஒருமாத ஊதியம் ரூபாய் 4,496ஐ வெள்ள நிவாரண நிதிக்கு வழங்கியுள்ளார்.

அசோசியேட்டட் கட்டட நிறுவனத்தைச் சேர்ந்த அப்துல் ரஹ்மான் ரூபாய் ஒரு லட்சத்தை முதல்வரிடம் வழங்கினார்.

## வீடியோதிருட்டு: பட அதிபர்கள் புகார்

சென்னை நவ. 27 — வீடியோ திருட்டு குறித்து நடவடிக்கை எடுக்கக்கோரி தென் இந்திய திரைப்பட வர்த்தக சபை தலைவர் முக்தா சீனிவாசன் மற்றும் டி. ராமானுஜம், இயக்குனர்கள் பாக்யராஜ், ஏ.எஸ்.பிரகாசம் உள்ளிட்ட பலதிரைப்பட பிரதிநிதிகள் போலீஸ் கமிஷனர் தேவாரத்திடம் வலியுறுத்தினர். பழையபடப் பெயரை கேசட்டின் மேல் எழுதி ஒட்டி புதிய படங்களை வீடியோ கேசட்டாக விற்கும் மோசடி பற்றியும் இவர்கள் கூறினர். இது குறித்து நடவடிக்கை எடுப்பதாக தேவாரம் கூறினார். அனுமதி பெறாத வீடியோ கேசட்டுகளை வைத்திருக்கும் வீடியோ கடை உரிமையாளர்கள் லைசென்ஸ் ரத்து செய்யப்படுமென்று தேவாரம் எச்சரித்துள்ளார்.

## கோவை ஊழியர் கேரளாவில் மரணம்

திருவனந்தபுரம், நவ. 27- பரிய ஜோசப் பாக்கியநாதன் கோவையில் டி.வி.எஸ். நிறுவனத்தில் வேலை பார்ப்பவர் வயது 24.

திருவனந்தபுரம் சென்ற அவர் அங்குள்ள கரமண ஆற்றில் குளிக்கச்சென்றார் அப்போது ஆற்று வெள்ளத்தில் அடித்துச்செல்லப்பட்டு இறந்தார்.

## கழக கொடியேற்று விழா

சென்னை, நவ. 27— மாதவரம் மத்திய பால் பண்ணையில் அண்ணா தொழிற்சங்கம் சார்பில் கழக கொடியேற்று விழா நடைபெற்றது. டன்லப் வேல்முருகனும், சிப்சன்புருஷோத்தமனும் கழகக்கொடிகளை ஏற்றி வைத்தனர்.

பின்னர் கோதண்டம் பரசுராமன் ஆகியோர் தலைமையில் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில் சோமசுந்தரம், உஸ்மான் அலி, தாமலிங்கம் ஜம்புவடிவேலு, மாணிக்கவேலு, வாதன், சம்பத், பழனி, தனசேகரன், ஆல்பர்ட், வேதாசலம், மாணிக்கம், கிருஷ்ணன், சீனிவாசன், சூரியகுமார், கமலநாதன், பத்மநாபன் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

## போப் ஆண்டவர் சென்னை வருகை: சுற்றுப்பயண விவரம்

சென்னை நவ. 27— போப் ஆண்டவர் சென்னை வருகையையொட்டி வாட்டிகன் நகரில் இருந்து முன்கூட்டியே வந்துள்ள தூதுக்குழு சென்னையில் பல்வேறு இடங்களை பார்வையிட்டது. போப் ஆண்டவர் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகளும் அறிவிக்கப்பட்டுள்ளன.

கத்தோலிக்கர்களின் மதகுருவான போப் ஆண்டவர் அடுத்த ஆண்டு 1986 பிப்ரவரி மாதம் சென்னைக்கு வருகிறார். சுற்றுப்பயணத்தின் போது அவர் செல்லும் இடங்களை பார்வையிட வாட்டிகான் நகரில் இருந்து தூதுக்கோஷ்டி ஒன்று பாதிரியார் ரோபர்ட்டோடுசி தலைமையில் சென்னை வந்தது.

போப்ஆண்டவர் கலந்து கொள்ளும் பல்வேறு இடங்களை அவர்கள் சுற்றிப் பார்த்தனர். செயின்ட் தாமஸ் மவுண்ட், மயிலாப்பூர் சாந்தோம், ராஜாஜி மண்டபம், மெரீனா கடற்கரை ஆகிய இடங்களை அவர்கள் பார்வையிட்டனர். பின்னர்கோட்டையில் தலைமை செயலாளர் டி.வி. அந்தோணியையும் சந்தித்து ஆலோசனை நடத்தினார்கள்.

டெல்லியில் உள்ள கிறித்துவ பாதிரியார் அகஸ்டினோ, ஆர்ச்பிஷப் டாக்டர் அருளப்பா, விகார் ஜெனரல் ஏ.ஜெ அடைக்கலம் ஆகியோர் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

சுற்றுப் பயணம் பற்றிய விவரங்கள் அறிவிக்கப்பட்டன. அடுத்த ஆண்டு பிப்ரவரி 5ம் தேதி காலை 11 மணிக்கு சென்னை மீனம்பாக்கம் விமான நிலையம் வருகை வரவேற்புநிகழ்ச்சி 11-10 செயிண்ட்தாமஸ் மவுண்ட் பயணம்.

11-40 அண்ணாசாலைவழியாக ராஜாஜி மண்டபம் வருகை. பின்னர் சாந்தோம் வருகை. 3-40 மெரீனா கடற்கரையில் பிரார்த்தனை கூட்டம். மாலை 7-10 மணிக்கு மீனம்பாக்கத்தில் இருந்து விமானம் மூலம் கொச்சிக்கு செல்கிறார்.

இவ்வாறு அவரது சுற்றுப் பயணம் பற்றி தெரிவிக்கப் பட்டுள்ளது.

## ஊழியரை தாக்காதீர்: பல்லவன் நிர்வாகம் வேண்டுகோள்

சென்னை, நவ. 26— பஸ் ஊழியர்களை தாக்கமுற்படாதீர் என்று பொதுமக்களுக்கு பல்லவன் போக்குவரத்துக் கழகம் வேண்டுகோள் விடுத்துள்ளது.

பஸ் ஊழியர் தவறு செய்தால் புகார் செய்யுங்கள் அதை விடுத்து ஊழியரை தாக்குவது முறையல்ல.

தாக்க முற்படும் பழக்கத்தை கைவிட வேண்டும் என்று பல்லவன் நிர்வாகம் கேட்டுக் கொண்டுள்ளது.

# ஆசிரியர்போராட்டத்தை தூண்டி அரசியல் லாபம் பெறநினைக்கும் தி.மு.க.

### அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கடும் தாக்கு

மதுரை, நவ. 27 — ஆசிரியர்கள் போராட்டத்தை தூண்டிவிட்டு அதன் மூலம் அரசியல் லாபம் பெறலாமென கருணாநிதி எண்ணுகிறார் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

மதுரை மாநகர மாவட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணி சார்பில் பால்வள ஒன்றிய தலைவர் சோ. நவநீதகிருஷ்ணன் விவசாய பொறியியல் வாரிய தலைவர் சேடபட்டி முத்தையா எம்.எல்.ஏ. ஆகியோருக்கு பாராட்டு விழா தெற்குமாட வீதியில் நடந்தது.

விழாவுக்கு நகர் மாவட்ட இளைஞர் அணி செயலாளர் எஸ். டி. கே. ஜக்கையன் தலைமை தாங்கினார்.

முன்னாள் கவுன்சிலர் ரத்னவேல் முருகேசன் வரவேற்று பேசினார்.

விழாவில்கலந்துகொண்டு அமைச்சர் பண்ருட்டிராமச்சந்திரன் பேசியதாவது:—

ஏழை எளிய மக்களுக்காக ஏற்படுத்தப்பட்ட அரசு தான் இது. எனவே இந்த அரசை எதிர்த்து ஆசிரியர்கள் அல்ல மற்ற யார் போராடினாலும் சொல்கிறேன். நல்லவர் கெட்டவர் என்று பாராமல் அள்ளித்தரும் வள்ளல் புரட்சித்தலைவர். அவர் கலையாத மனதுடன் ஏன் இருக்கிறார்? காரணம் உண்டு அரசிடம் உள்ள பணம் புரட்சித்தலைவர் சொந்தபணம் அல்ல மக்கள் கொடுத்த வரிப்பணம் அதன் காவலராக அவர் உள்ளார்.

மாதம் 20, 30, 50, 60, கிடைக்காதவர்கள் அரை வயிற்று கஞ்சிகுடிப்பவர்கள் 3 கோடி பேர் தமிழகத்தில் உள்ளனர்.

அவர்களை கரையேற்றுவது அரசின் கடமையாகும் இந்த கடமை படித்தவர்களுக்கு தெரியாதா? சுயநலம் மட்டும்தானா?

### போராட்டம் ஏன்?

ஆசிரியர் போராட்டம் தேவை தானா? நியாயம் தானா. சம்பளம் அதிகம் வேண்டும் என்று யார் கோரிக்கை வைத்தாலும் ஆதரவு கிடைக்கத் தான் செய்யும் கேட்கும் இடம் பற்றி புரிய வேண்டாமா? ஆசிரியர்களுக்கும் 42 சங்கங்கள் உள்ளன.

ஒரு சங்கம் கோரிக்கை வைத்தால் மற்ற சங்கத்தினர் ஆதரிக்க அவர்கள் வளர்ந்து விடுவார்களே என்று இவர்களும் கோரிக்கை வைக்கிறார்கள். ஆசிரியர்களை பொறுத்தவரை அவர்கள் போராட்டம் நியாயமாக இருக்கலாம். பொது மக்களை பொறுத்தவரை என்ன நிலைமை என்று உணர வேண்டும்.

### வெறும் வாயை மெல்லும் தலைவர்

வெறும் வாயையே மெல்லும் ஒரு தலைவர் இருக்கிறார். அவருக்கு ஒரு பிரச்சினை கிடைத்துவிட்டால் விடுவாரா அவர் போராட்டம் நடத்தட்டும். சிறைக்கு போகட்டும். 10நாள் 15நாள்கருணாநிதி சிறையில் இருக்கிறார் என்பதற்காக அப்பாவி தொண்டர்கள் யாரும் தங்களை வருத்திக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இலங்கையின் சர்வாதிகாரத்தையும், அநீதியையும் எதிர்த்து போராடுகிறார்கள் விடுதலைப்புலிகள் தங்கள் உயிரை கூட மதிக்காமல் போராடுகிறார்கள். அந்தஇளைஞர்கள் பக்கம் மத்திய அரசை ஆதரவாக ஈடுபட செய்தவர் புரட்சித் தலைவர். ஒரு நாட்டில் ஆயுத போராட்டம் நடத்துபவர்களுடன் அந்த நாட்டு அரசுகள்பேசியதாக வரலாறு இல்லை.

இலங்கை அரசை விடுதலைப் புலிகளுடன் பேசும் நிலையை ஏற்படுத்தியவர் முதல்வர் புரட்சித்தலைவரும் பிரதமர் ராஜீவ்காந்தியும் ஆவார்கள்.

இவ்வாறு அவர் பேசினார்.

மற்றும்கூட்டத்தில்சேடப்பட்டி முத்தையா எம்.எல்.ஏ., பால்வள ஒன்றிய தலைவர் சோ. நவநீதகிருஷ்ணன் முன்னாள் மேயர் எஸ். க. பாலகிருஷ்ணன், முன்னாள் துணைமேயர் முனியசாமி. ஏ.எம். சின்னு. தமிழ்மணி அப்சர்உசேன், திண்டுக்கல் சீனிவாசன் பாக்கியராஜ் மற்றும் ராமகிருஷ்ணன், பிரமிளா காந்தி ராகவன், பாண்டி மற்றும் பலர் பேசினார்கள்.

இரவு 8 மணிக்குதொடங்கிய கூட்டம் 1 மணிக்கு முடிந்தது.

பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு எம்.ஜி.ஆர். மன்றம் சார்பில் நினைவு பரிசு வழங்கப்பட்டது.

முத்தையா, நவநீதகிருஷ்ணன் ஆகியோருக்கு பண்ருட்டி ராமச்சந்திரன் பொன்னாடை போர்த்தினார்.

ஏராளமான அமைப்புகள் சார்பில் மலர் மாலைகளும் பொன்னாடைகளும் போர்த்தப்பட்டன.

## பிரதமருக்கு ஜனாதிபதி ஜைல்சிங் பாராட்டு

ரெய்ப்பூர், நவ 27— பிரதமர் ராஜீவ்காந்தியின் செயல்திறனை ஜனாதிபதி ஜைல்சிங் வெகுவாகப் பாராட்டியுள்ளார்.

மத்திய பிரதேசத்தில் ஜனாதிபதி ஜைல்சிங் மூன்று நாட்கள் சுற்றுப்பயணம் செய்தார். தனது சுற்றுப்பயண முடிவில் தேஷ்பந்து நாளிதழுக்கு ஜனாதிபதி பேட்டி அளித்தார். அப்போது பிரதமர் ராஜீவின் செயல் திறனை வெகுவாகப் பாராட்டிய ஜைல்சிங் இளம் பிரதமரின் தலைமையில் நாடு பத்திரமாக உள்ளது என்று கூறினார்

எல்லாத்துறைகளிலும் பிரதமர் ராஜீவ் கடுமையாக உழைத்து வருவதாகவும் ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்

# தமிழ்நாட்டில் வெள்ள நிவாரணத்திற்கு 145 கோடி ரூபாய்தேவை

### மக்கள் சபையில் குழந்தைவேலு வற்புறுத்தல்

புதுடெல்லி, நவ. 27— தமிழக வெள்ள நிவாரணத்திற்கு மத்திய அரசு 145 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்ய வேண்டும் என மக்கள் சபையில் கோரப்பட்டது.

மக்கள்சபையில் கழக அணித்தலைவர் குழந்தைவேலு, தமிழக வெள்ள நிவாரணம் குறித்துப் பேசுகையில் கூறியதாவது:-

தமிழ் நாட்டில் புயல்—வெள்ளத்தால் பெருமளவுக்குச் சேதம் ஏற்பட்டுள்ளது.

நிவாரணப் பணிகளை தமிழக அரசு போர்க்கால அடிப்படையில் மேற்கொண்டுள்ளது.

நிவாரணப் பணிகளுக்காக மத்திய அரசு தமிழக அரசுக்கு 145 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்யவேண்டும்.

### சேது சமுத்திர திட்டம்

உள்நாட்டு நீர் போக்குவரத்து மசோதாவை நாடாளுமன்றத்தில் மத்திய கப்பல்-போக்குவரத்து அமைச்சர் ராஜேஷ் பைலட் தாக்கல் செய்தார். இந்த மசோதாமீது நடந்த விவாதத்தில் கலந்து கொண்டு தமிழக முன்னாள் அமைச்சரும், நாடாளுமன்ற கழகஅணித் தலைவருமான குழந்தைவேலு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

இந்தியாவில் ஓடும் நதி நீர்களை எல்லாம் இணைக்க வேண்டும்.

அதன் மூலம் உள்நாட்டு கப்பல் போக்குவரத்து போன்றவைகளை ஏற்படுத்தலாம்.

பக்கிங்ஹாம் கால்வாய் திட்டம் நேரு காலத்தில் இருந்தது. அவருடைய பேரரான ராஜீவ்காந்தி காலம்வரை இன்னும் அந்த திட்டம் நிலுவையிலேயே உள்ளது. விரைவில் நிதி ஒதுக்கீடு செய்து அத்திட்டத்தை நிறைவேற்றவேண்டும்.

இத்திட்டத்தினால் மழை காலத்தில் வரும் வெள்ளம் வடிந்துசெல்வதற்கும். மற்ற காலங்களில் தமிழ்நாட்டிலிருந்து ஆந்திரா வரை சரக்குகளை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு கொண்டுசெல்வதற்கு வாய்ப்பாக இருக்கும்.

இத்திட்டத்திற்கு ஏற்கனவே தமிழகத்திலிருந்து ஒரு வடிவமைப்பு திட்டநகல் (மாஸ்டர் பிளான்) கொடுக்கப்பட்டுள்ளது.

அதற்காக 100 கோடி ரூபாய்க்கு மேல் தேவை என்றும் சுட்டிக் காட்டப் பட்டது.

### பக்கிங்ஹாம கால்வாய்

6-வது ஐந்தாண்டு திட்டத்தில் நீர் போக்குவரத்து துறைக்கு 520 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளதால்பக்கிங்ஹாம் கால்வாய் திட்டத்தையும் அதோடு சேர்த்து செயல் படுத்த வேண்டும்.

சேதுசமுத்திர கால்வாய்



திட்டம் பல ஆண்டுகளாக நிறைவேற்றப் படாமல் இருக்கிறது. ஜனதா ஆட்சி காலத்தில் நிறைவேற்றுவதாக உறுதி அளித்தனர்.

பிறகு மீண்டும் ஆட்சி பொறுப்பேற்ற மறைந்த பிரதமர் இந்திராகாந்தி அம்மையார் தமிழ் நாட்டுக்கு வரும்போதெல்லாம் நிறைவேற்றுவதாக கூறினார்.

இப்போது இத்துறைக்கு பொறுப்பேற்றுள்ள இளம் அமைச்சரான நீங்கள் (ராஜேஷ் பைலட்) இதையும் நிறைவேற்றி தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

### அதிக அதிகாரம்

இந்த மசோதாவில் உள்ள 34வது பிரிவின்படி இந்தத் துறையின் தலைவராக இருப்பவருக்கு அதிக அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

எந்த நேரத்தில் வேண்டுமானாலும் எந்த மாநிலத்தின் அதிகாரத்திலும் தலையிட்டு நிலங்களை ஆர்ஜிதப் படுத்தக கூடிய அதிகாரம் வழங்கப் பட்டிருக்கிறது.

இது மாநிலத்திற்கு உள்ள அதிகாரங்கள் மீது ஆக்கிரமிப்பு நடத்துகிற செயலாகும் இந்தப் பிரிவை உடனடியாக நீக்க வேண்டும்.

இவ்வாறு குழந்தைவேலு எம்.பி. பேசினார்.

விவாதத்திற்கு மத்திய அமைச்சர் ராஜேஷ்பைலட் பதிலளிக்கையில் பக்கிங்ஹாம்கால்வாய்திட்டத்தை யும் சேதுசமுத்திர கால்வாய் திட்டத்தையும் 7-வது ஐந்தாண்டு திட்ட காலத்தில் தாம் நிதி ஒதுக்கீடு செய்து நிறைவேற்றுவதாக கூறினார்.

## விருதுநகரில் தேசிய ஒருமைப்பாடு தினவிழா

விருதுநகர். நவ 27— காமராஜர் மாவட்டம் விருதுநகரில் மாவட்ட ஆட்சியர் விஜயராகவன் தேசியக்கொடி ஏற்றி வைத்து தேசிய ஒருமைப்பாடு உறுதி மொழி கூற, கூடியிருந்த அரசு அலுவலர்கள் உறுதி மொழி எடுத்துக் கொண்டனர்.

சாத்தூரில் மாவட்ட வருவாய் அலுவலர் சே. எம். சுப்பிரமணியம் சாத்தூர் வட்டாட்சியர் அலுவலக வளாகத்தில் தேசிய உறுதி மொழி கூற கூடியிருந்த அனைத்து அரசுப் பணியாளர்கள் உறுதிமொழி எடுத்துக் கொண்டனர்.

## ராணுவத்துக்கு ஆள் எடுக்க புதிய முறை

சென்னை, நவ. 27- ராணுவத்துக்கு ஆள் எடுப்பதில் புதியமுறை அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது.

ராணுவத்துக்கு முன்பெல்லாம் ஆள் எடுக்கும் போது விண்ணப்ப மனு எதுவும் கோராமல் நேரடியாகவே ஆட்களை தேர்வு செய்து வந்தனர். இந்த முறையில் பல முறைகேடுகள் நடப்பதாக வந்த புகாரை அடுத்து இந்த முறை மாற்றப்பட்டு விண்ணப்ப மனு மூலம் ஆட்களை எடுக்கும் புதிய முறையை ராணுவ இலாகா அமல் படுத்துகிறது.

ராணுவத்தில் சேர விரும்புவோர் தேனாம்பேட்டையிலுள்ள ராணுவ ஆள் சேர்ப்பு தலைமையகத்தில் விண்ணப்ப மனு பெற்று பூர்த்தி செய்து அனுப்பவேண்டும் புதிதாக அறிமுகபடுத்தப்பட்ட முறைப்படி முதன் முதலாக ஆட்களை தேர்ந்தெடுக்க விண்ணப்ப மனு அனுப்ப வேண்டிய கடைசி நாள் டிசம்பர் 10 என்று ராணுவ ஆள் சேர்ப்பு அலுவலக செய்தி குறிப்பு தெரிவிக்கிறது.

## சென்னை - விழுப்புரம் சாலையில் மீண்டும் பஸ்போக்குவரத்து

மதுராந்தகம், நவ. 27- சென்னைக்கும் விழுப்புரத்திற்கும் இடையே மதுராந்தகம் வழியாக மீண்டும் சாலைப்போக்குவரத்து ஆரம்பமானது.

அண்மையில் பெய்தபெரு மழையால் மதுராந்தகம் அருகே கல்லாறு பாலத்தில்உடைப்புஏற்பட்டது.

அதனால் சென்னை-விழுப்புரம் பஸ் போக்குவரத்து அடியோடு பாதிக்கப்பட்டது.

தமிழக நெடுஞ்சாலைத் துறையினர் மின்னல் வேகத்தில் சாலை சீரமைப்புப் பணிகளைச் செய்தனர். கல்லாறு பாலம் அருகே தற்காலிகமாக ஒரு பாதை அமைக்கப்பட்டது.

அந்தப் பாதை வழியாக மீண்டும் சென்னைக்கும் விழுப்புரத்திற்கும்இடையே பஸ் போக்குவரத்து ஆரம்பமானது. திருவள்ளுவர் பஸ் போக்குவரத்துக் கழக பஸ்கள் உட்பட அனைத்து அரசு பஸ்களும் தனியார் லாரிகளும் தற்காலிகச் சாலை வழியாக சென்று கொண்டிருக்கின்றன.

### ரெயில் பாதை

கல்லாறு பாலம் டிசம்பர் ஏழாம் தேதிக்குள் சீர்படுத்தப்பட்டு விடும். அதன் பின்னர் பாலத்தின் வழியாக பஸ் போக்குவரத்து நடைபெறும்.

மதுராந்தகத்திற்கு அருகே ரெயில்பாதையை சீரமைக்கும் வேலையும் துரிதமாக நடைபெற்று வருகிறது டிசம்பர் இரண்டாவது வாரத்தில் சென்னைக்கும் விழுப்புரத்திற்கும் இடையே ரெயில் போக்குவரத்து ஆரம்பமாகும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

## போபால் விஷவாயு: இறந்தோர்குடும்பத்துக்கு ரூ. 6 கோடி நட்டஈடு

போபால், நவ. 27— போபாலில் ஏற்பட்ட விஷவாயு விபத்தில் இறந்தவர்கள் குடும்பங்களுக்கு முதற்கட்டமாக 6 கோடி ரூபாயை இடைக்கால நிவாரணமாக வழங்க நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது.

மத்தியபிரதேச தலைநகரான போபாலில் யூனியன் கார்பைட் கம்பெனி தொழிற் சாலையிலிருந்து விஷவாயு கசிந்து நூற்றுக் கணக்கானவர் இறந்தது தெரிந்ததே.

இறந்தவர்கள் குடும்பங்களுக்கும், விஷ வாயுவினால் ஊனமுற்றவர்களுக்கும் நட்டஈடு வழங்குமாறு யூனியன் கார்பைட் என்ற அமெரிக்க கம்பெனி மீது வழக்குத்தொடரப்பட்டது. வழக்கை அமெரிக்காவில் போபால் நீதிமன்றம் விசாரித்தது.

இறந்தவர்கள் குடும்பத்துக்கும் பாதிக்கப்பட்டவர்கள் குடும்பத்துக்கும் முதல் கட்டமாக அறுகோடி ரூபாய் (50 லட்சம் டாலர்) இடைக்கால நிவாரண நிதி அளிக்க நீதிபதி உத்தர விட்டார்.

அதன்படி அந்த தொகை அடுத்த டிசம்பர் மாதம் போபாலில் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு வழங்கப்படும் என்று யூனியன் கார்பைட் கம்பெனி அறிவித்தது.

செஞ்சிலுவைச் சங்கம் மூலம் அந்த தொகையை வினியோகிக்க நீதிபதி உத்தர விட்டார்.

# சேலம் உருக்காலை திட்டத்துக்குகூடுதல்நிதி: கழகஎம்.பி.வலியுறுத்தல்

புதுடெல்லி, நவ. 27— சேலம் உருக்காலை திட்டத்துக்கு கூடுதல் நிதி ஒதுக்க வேண்டுமென்று கழக உறுப்பினர் ஏ.சி. சண்முகம் நாடாளுமன்றத்தில் வலியுறுத்தினார்.

நாடாளுமன்றத்தில் நலிவுற்ற தொழில் நிறுவனங்களுக்காக கொண்டு வந்த சட்டத்தை வரவேற்று கழக உறுப்பினர் ஏ.சி. சண்முகம் பேசுகையில் கூறியதாவது:

உண்மையான நலிவுற்ற தொழில்களுக்குதொடர்ந்து கடன் கொடுத்து உதவ வேண்டும். முடிநதால்வங்கி கடன்களை தள்ளுபடி செய்யவேண்டும். அல்லது உடனடியாகதொழிலாளர்களை காப்பாற்ற இந்திய அரசு அத்தொழிற்சாலைகளை எடுத்து நடத்த வேண்டும்.

நலிவுற்றதொழிற்சாலைகளை அரசு ஏற்று நடத்தி லாபத்தில் கொண்டு வந்திருக்கிறது. தமிழகத்தில் காவேரி சுகர் மில் - நலிந்து விட்ட நிலையில் அரசு ஏற்று நடத்தி இன்று வெற்றி பெற்றுள்ளதைப் பாராட்ட கடமைப்பட்டுள்ளேன்.

சென்னை பி. அண்ட் சி மில் நவீனமயமாக்க நிதி உதவி அளிக்க வேண்டும். ஆங்கிலேயர் காலத்தில் உருவாக்கப்பட்ட அத்தொழிற்சாலைக்கு மைய அரசு உதவி செய்ய வேண்டும்.

சேலம் ஸ்டீல் ரோலிங் உருட்டாலை நிலைமை பரிதாபமாக உள்ளது. சிறிது சிறிதாக ஆட்குறைப்பு செய்வதாக கூறப்படுகிறது. தொழிலாளர்கள் மத்தியில் பதட்ட நிலை உருவாகி உள்ளது.

எந்த அடிப்படையில் தமிழகத்திற்கு சேலம் உருக்காலையை- திட்டமாக தந்தீர்களோ அதை செயல்படுத்த தமிழக அரசும், தமிழகமக்களும் வற்புறுத்துகிறோம். சேலம் உருட்டாலையைஉருக்காலையாக மாற்ற 7-வது ஐந்தாண்டு திட்டத்தில் நிதி ஒதுக்கல் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

தமிழகத்தில் முடிக்கிடந்த 17 தொழிற் சாலைகளில் முதல்வர் புரட்சித் தலைவர் தலையிட்டு 9 தொழிற்சாலைகளை வெற்றிக்கரமாக நடத்த எல்லா ஏற்பாடுகளையும் செய்துள்ளார்.

சிறு தொழில்களை வளர்க்க, காப்பாற்ற, தமிழகஅரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. தமிழகம் தொழிலாளர் பிரச்சினையில் அமைதி பூங்காவாககாட்சி அளிக்கிறது.

இந்தியா முழுவதிலும் தொழில் வாரியாக தொழிலாளர்களைப் பிரித்து போனஸ் நிர்ணயம் செய்வதுபோல தொழிலாளர்களுக்கு ஏற்றத்தாழ்வற்ற ஊதியம் நிர்ணயம் செய்ய வேண்டும், அதை நடைமுறைபடுத்த எல்லா நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும்.

இவ்வாறு ஏ.சி.சண்முகம் பேசினார்.

## மஞ்சளாறு அணை திறப்பு

மதுரை, நவ. 27— மஞ்சளாறுநீர்த்தேக்கத்திலிருந்து 2000 ஏக்கர் பரப்பளவில் ஒரு போக நெல் சாகுபடி செய்வதற்காக மஞ்சளாறு பிரதான வாய்க்கால் மூலம் 12ம் தேதி முதல் 15—3—86 வரை தண்ணீர் பாசனத்திற்கு அனுமதிக்கப் படுவதாகத் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

மேற்கொண்டு தண்ணீர் வழங்குவதற்கு கால நீட்டிப்பு எதுவும் அனுமதிக்க முடியாது என மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜுலு அறிவித்துள்ளார்.

## ராக்கெட் சோதனை வெற்றி

திருவனந்தபுரம், நவ. 27- நவீன சோதனை கூடங்கள் உள்ள செயற்கை கோளை விண்வெளிக்கு ராக்கெட்டில் அனுப்பும் ஏற்பாடுகளை திருவனந்தபுரம் விண்வெளி ஆராய்ச்சி நிபுணர்கள் செய்துவருகிறார்கள். பரிசிலனையில் இந்த அமைப்பு நல்ல முறையில் இருப்பது தெரிய வந்தது அடுத்த மார்ச்—ஏப்ரல் மாதத்தில் இது விண்வெளிக்கு செலுத்தப்படும் மூன்று கட்டமாக செயல்பட்டு அந்த ராக்கெட் விண்வெளிக்குச்செல்லும்.

## உலகைச் சுற்றும் படகின் கதி என்ன?

புதுடெல்லி, நவ. 27— இந்திய ராணுவ வீரர்கள் 6 பேர் கொண்ட குழு படகு ஒன்றில் உலகைச் சுற்றும் பயணத்தை மேற்கொண்டுள்ளனர்.

கடந்த இரு நாட்களாக இந்தப் படகில் இருந்து எந்த வித தகவல் தொடர்பும் இல்லை.

இருதினங்களுக்கு முன்பு படகு நன்னம்பிக்கைமுனையில் இருந்தது உறுதிப்படுத்தப்பட்டது.

இப்படகுடன் தகவல் தொடர்பு ஏற்படுத்த உதவுமாறு மத்திய வெளி விவகாரத்துறை அமைச்சகத்தை லெப்டினன்ட் ஜெனரேல்ராட்டிஜி டைஸ்கேட்டுக்கொண்டுள்ளார்.

# இந்திய அதிகாரிகளை கொல்ல முயன்ற சீக்கிய தீவிரவாதிகள்

இஸ்லாமாபாத் நவ.27 பாகிஸ்தானில் லாகூர் அருகே நான்கனா என்ற இடத்தில் உள்ளகுருத்வாராவில் நடைபெற்ற விழாவில் ஏராளமான சீக்கியர்கள் பங்கேற்றனர்

இந்தியா-கனடாவிலிருந்து ஏராளமான சீக்கியர்கள் இவ்விழாவிற்குவந்திருந்தனர்

இந்த விழாவில் பயணிகளை ஒழுங்குபடுத்தும் பணிகளை மேற்பார்வையிட இந்திய தூதரக அதிகாரிகள், பி.ஜெயின் கே. கன்னா ஆகியோர் சென்றிருந்தனர்.

அப்போது சிலர் இந்திய தூதரக அதிகாரிகளை தாக்கினர்.

இச்சம்பவத்தில் தலையில் இரு அதிகாரிகளுக்கும் காயம் ஏற்பட்டது. பின்னர் இந்த இரு அதிகாரிகளுக்கும் லாகூர் மருத்துவமனையில்சிகிச்சையளிக்கபட்டது.

# ஏழை எளிய மக்களின் பொருளாதாரம் மேம்பட புரட்சித்தலைவர் திட்டம்

## டெல்லி கண்காட்சி விழாவில் ஆனூர் ஜெகதீசன் பேச்சு

புதுடெல்லி, நவ. 27- சமுதாயத்தில் தாழ்ந்த நிலையிலுள்ள ஏழை எளிய மக்களின் பொருளாதாரத்தை மேம்படுத்தும் வகையில் முதல்வர் புரட்சித் தலைவர் தீவிர திட்டங்களை செயல்படுத்தி வருகிறார் என்று அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கூறினார்.

புதுடெல்லியில் நடைபெற்ற அகில உலக வர்த்தக பொருட்காட்சியில் தமிழ்நாடு தினத்தன்று அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் பங்கேற்று பேசுகையில் கூறியதாவது:—

இந்தியத் துணைக்கண்டம் இன்று உலகோர் வியப்புறும் வண்ணம் தொழில் வளர்ச்சியிலும் தொழில் நுணுக்க அறிவிலும் வெகு வேகமாக முன்னேறி, வளர்ந்துவரும் நாடுகளுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது.

தமிழகத்தைப் பொறுத்த வரை இன்றைய ஆட்சியிலே தொழில் வளர்ச்சியும் தொழில் அமைதியும் பாராட்டும் வகையில் உள்ளது.

## புரட்சித் தலைவர் அக்கறை

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள்தொழில் வளர்ச்சியில் பெரிதும் அக்கறை காட்டியும் எங்களுக்கெல்லாம் அறிவுரை கூறியும் வருகிறார். தமிழகத்தில் சிறிய, பெரிய தொழில்கள் வளர அனைத்து வசதிகளும் உள்ளன.

இதுபோன்ற தொழிற் பொருட்காட்சிகள், நமது தொழில் முன்னேற்றத்தை, தொழில் வளத்தினை, நமது அறிவியல் வளர்ச்சியினை மேலைநாடுகளும் வளர்ந்த வளர்ந்து வரும் நாடுகளும் கண்டு அறிய சிறந்ததொரு வாய்ப்பாக அமைகின்றன. அதே நேரத்தில் வெளிநாட்டினரின் தொழில் வளர்ச்சியினையும் கண்டறிய நல்ல வாய்ப்பாக அமைந்துள்ளது. இந்தியப் பேரரசு எடுத்து வரும் இந்த நல்ல முயற்சி தொடர்ந்து நல்ல பலனையளிக்கும் என்பதில் ஐயமில்லை.

தொழில்வளர்ச்சியில்மேம்பாடு அடைந்துவருவதுடன் தமிழகம் என்றும் தனது பண்டைய கலாச்சாரத்தையும் பண்பாட்டினையும் பேணிப் பாதுகாத்து வந்துள்ளது. அதனை எடுத்துக் காட்டத்தான் இது போன்ற கலைநிகழ்ச்சிகள்.

## நலிவற்றோருக்கு நல்வாழ்வு

தொழில் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை காட்டும் இதே நேரத்தில், நலிவுற்றோருக்கு நல்வாழ்வு கொடுக்கவும், சமுதாயத்தில் தாழ்ந்தநிலையிலுள்ள மக்களின் பொருளாதார நிலையை மேம்படுத்தவும் தமிழகஅரசு முழுமூச்சுடன் செயல்பட்டு வருகிறது.

கல்வியில், குறிப்பாக அறிவியல் சார்பான கல்வியிலும் தமிழ்நாடு அரசு மிகுந்த கவனம் செலுத்தி வருகிறது. பள்ளி சிறார்களுக்கு ஆண்டு முழுவதும் இலவச சத்துணவு வழங்கி வருகிறது. வறிய நிலையிலுள்ள குழந்தைகளுக்கு இலவச சீருடை, இலவச பாடநூல்ஆகியவற்றையும் வழங்கிவருகிறது.

இவ்வாறு ஆனூர் ஜெகதீசன் பேசினார.

# தமிழக கடலோர மாவட்டங்களில் அதிகமாகபெய்தமழை

சென்னை, நவ. 27 வடகிழக்குப் பருவக் காற்றின் காரணமாகதமிழகத்தின் கடற்கரை மாவட்டங்களில் அதிக அளவு மழை பெய்திருக்கிறது.

வடகிழக்குப் பருவக்காற்றோடு அண்மையில் வங்கக்கடலில்ஏற்பட்ட காற்றழுத்தமண்டலத்தின்காரணமாக வழக்கமாகப் பெய்யும் அளவுக்கு அதிகமாகவே மழை பெய்திருக்கிறது.

சென்னை செங்கல்பட்டு மாவட்டங்களில் வடகிழக்குப் பருவ காற்றின் காரணமாக வழக்கமாக அதிகபட்சம் 80 சென்ட்டி மீட்டர் மழையும் 67சென்ட்டி மீட்டர் மழையும் பெய்யும்.

ஆனால் இந்த ஆண்டு114 சென்ட்டி மீட்டர் மழையும் 121 சென்ட்டி மீட்டர் மழையும் பெய்திருக்கிறது.

சென்னையில் ஒரு ஆண்டு முழுக்க 114 சென்ட்டி மீட்டர் மழைதான் பெய்யும் ஆனால் நவம்பர் 25ம் தேதியுடன் முடிந்த கடந்த 42 நாட்களிலேயே 114 சென்ட்டி மீட்டர் மழை பெய்திருக்கிறது.

மீனம்பாக்கம் பகுதியில் ஆண்டு முழுக்க நல்லமழை பெய்தால் 121சென்டி மீட்டர் மழை பெய்யும் ஆனால் 42 நாட்களில் 124 சென்டி மீட்டர் மழை பெய்திருக்கிறது.

## செங்கற்பட்டு

செங்கற்பட்டு மாவட்டம் முழுக்க சராசரி 40 சென்டி மீட்டர் மழை பெய்யும் ஆனால் 42 நாட்களில் 70 சென்டி மீட்டர் மழை பெய்திருக்கிறது.

வழக்கமாக ஒரு ஆண்டில் பெய்யும் மழையைக் காட்டிலும் இது 70 சதவிகிதம் அதிகமாகும்.

தஞ்சை மாவட்டத்தில் 43 சென்ட்டி மீட்டருக்குப் பதிலாக 70 சென்டி மீட்டர் மழை பெய்திருக்கிறது.

தென் ஆற்காடு மாவட்டத்தில் 38சென்டி மீட்டருக்குப்பதிலாக 50 சென்டி மீட்டர் மழை பெய்திருக்கிறது.

இது வழக்கமாக ஒரு ஆண்டில் பெய்யும் மழையை காட்டிலும் 38 சதவிகிதம் கூடுதலாகும்.

வடஆற்காடு, காமராசர் மாவட்டம், கன்னியாகுமரி நெல்லை மாவட்டங்களில் பரவலாக சுமாரான மழை பெய்திருக்கிறது.

## போதிய மழையா?

திருச்சி, அண்ணா மாவட்டம், மதுரை, பெரியார், தர்மபுரி மாவட்டங்களில் வடகிழக்குப் பருவக்காற்றால்வழக்கமாகப் பெய்யும் மழையை விட குறைவாகவே மழை பெய்திருக்கிறது.

மதுரை அண்ணா மாவட்டங்களில் வழக்கமாக பெய்யும் மழையில் 40 சதவிகித மழைதான் பெய்திருக்கிறது

சேலம் பெரியார் மாவட்டங்களில் வழக்கமாகப் பெய்யும் மழையில் 57 சதவிகிதமழை தான் பெய்திருக்கிறது. திருச்சி மாவட்டத்தில் 59 சதவிகித மழை பெய்திருக்கிறது.

## வீரகனூர் அணை திறப்பு

மதுரை நவ. 27— வீரகனூர் மதகு அணையின் கீழ் இராமநாதபுரம்பெரிய கண்மாய் வரை உள்ள வைகை ஆறு, வைகை கால்வாய்களின் மூலம் பயன்பெறும் பழைய வைகை பாசன நிலங்களுக்கு வைகைஅணையிலிருந்து 20ம்தேதி முதல் 28ம் தேதி காலை வரை பாசனத்திற்காக தண்ணீர் திறந்து விடப்படும்.

பொதுப் பணித்துறையுடன் ஒத்துழைப்பு கொடுத்து சிறந்த நீர் பங்கீட்டிற்கு உதவுமாறு வைகை பழைய ஆயக்கட்டு பாசனதாரர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள் என்று மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜுலு அறிவித்துள்ளார்.